ஸ்ரீ:



ஸ்ரீ மணவாள மாமுனிவன் அருளிய

# "யதிராஜ விம்சதி"

(மூலமும், தமிழில் கருத்து உரையும்)

திருவாய்மொழி சிந்தனைச் செல்வர், செந்தமிழ் வேதியர்,
"திருமால்" ஆசிரியர்,
ஸ்ரீ. உ.வே. குமாரவாடி சே. இராமானுஜாச்சார்ய ஸ்வாமி



ஸ்ரீ மணவாள மாமுனிகளின் 631வது திரு அவதார
திவ்யதின இலவச வெளியீடு - விக்ரம ஸ்ரீ
ஐப்பசி மீ 16உ திருமூலம் - 1-11-2000

ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து



The Little Flower Co., Madras - 600 017
LIFCO Associates, Madras - 600 017

ஸ்ரீ:

# நூல் வரலாறு

ஸ்ரீ வைஷ்ணவ பூர்வாசார்ய பரம்பரையில் முடி(வு) மணியான ஸ்ரீமணவாள மாமுனியின் ஆசார்யர் திருவாய்மொழிப் பிள்ளை என்னும் ஸ்ரீ சைலேசர்.

திருக்குருகூரில் ஆதிநாதர் கோயில் வளாகத்தில் நம்மாழ்வாருக்கு, புளிய மரத்தருகே தனி ஸந்நிதி அமைத்ததுடன் ஆழ்வார் திருநகரியின் ஒரு பகுதியில் இராமாநுசன் அடியார்களைக் குடியமர்த்தி 'ராமாநுஜ சதுர்வேதி மங்கலம்' எனப் பெயரிட்டு, நம்மாழ்வார் நாதமுனிக்கு வழங்கிய 'பவிஷ்யத் (எதிர்கால) ஆசார்யர் (ராமாநுஜர்) விக்ரகத்தையும் அங்கு ப்ரதிஷ்டை செய்தார்.

பின்னர் ஆழ்வார் திருநகரியில் அவதரித்து, தமக்கு சிஷ்யரான, மணவாள மாமுனியிடம் அக்கோயிலை ஒப்படைத்தார். இராமாநுசரிடம் ப்ரேமம் கனக்க உண்டாகி, எதிராசர் அருள்திறத்தை மாமுனி இருபது வடமொழி சுலோகங்களில் வடித்து அளித்தார். சொல் அழகு, பொருட் செறிவு அறிவு ஆற்றலோடு, அடக்கப்பணிவு ஆத்ம குணபூர்த்தி அத்தனையும் இதில் காணலாம். முக்தி மார்க்கத்தலை வாசலாகத் திகழ்வது இந்நூல்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# யதிராஜ விம்சதி

## தனியன்

யஃ ஸ்துதிம்யதிபதி ப்ரஸாதநீம்
வ்யாஜஹார யதிராஜ விம்சதிம்
தம் ப்ரபந்ந ஜநசாதகாம்புதம் நௌமி
ஸௌம்ய வரயோகி புங்கவம்

—எறும்பி அப்பா.

யதிகட்கு இறைவன் இராமாநுசன் திருவுள்ளம் உகக்குமாறு, 'யதிராஜ விம்சதி' என்னும் இருபது ச்லோகம் அருளிய மணவாள மாமுனி தாகம், தணிய மற்றொன்றும் வேண்டாது மழை நீருக்காக வாய் திறந்து காத்திருக்கும் சாதகப் பறவை போன்று. திருமால் அருளையே உய்வுக்கு வேண்டி நிற்கும் அடியார்களுக்குக் கருணை மழை பொழியும் மரபு வழுவாத மணவாள மாமுனியை வணங்குகிறேன்.

ஸ்ரீ மாதவாங்க்ரி ஜலஜத்வய நித்யஸேவா
ப்ரேமாவிலாசய பராங்குசபாத பக்தம் ।
காமாதி தோஷஹரம் ஆத்ம பதாச்ரிதாநாம்
ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா ॥ 1

அலர்மேல் மங்கை உறை மார்பன் திருவடித் தாமரைகளை எப்போதும் தொழுகின்ற உள்ளத்தராய், அவன் அடிக்கீழ் சரண்புகுந்த நம்மாழ்வாரின் தாள் பணிந்து உய்வு பெற்றவரும், தனது திருவடித் தொடர்பால் அடியார்களின் காம க்ரோதங்களை அகற்றுபவரும், துறவு அரசருமான எம்பெருமானார் தாளில் தலைமடுத்து வணங்குகிறேன்.

ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸம்
ஸ்ரீமத் பராங்குசபதாம்புஜ ப்ருங்கராஜம்
ஸ்ரீ பட்டநாத பரகால முகாப்ஜ மித்ரம்
ஸ்ரீவத்ஸ சிஹ்ந சரணம் யதிராஜமீடே 2

அரங்கமாளிகை அம்மான் திருக்கமல பாதங்களில், பொன்னரங்கம் என்னில் மயலே பெருகும் இராமாநுசன் சிறகடித்து உலவும் அரச அன்னம் போன்றவர் - திருவரங்கம் பெரிய கோயில் நம்பெருமாளுக்கு ஏற்ற 'திருமாலவன் கவி' மாற்றாரின் மாற்றழிக்கும் மாறன் பராங்குசன் பாத மலரில் தேன் அருந்தும் வண்டாவர், பல் கலையோர் தாம் மன்ன வந்த இராமாநுசன்.

பொங்கும் பரிவாலே பரமனுக்குப் பல்லாண்டு பாடும் தூய பட்டநாதன், மற்றும் வாள் வலியால் மந்திரம் கொண்டு எதிரிகளுக்கு எமனாக விளங்கும் பரகாலன் திருமங்கை மன்னன் போன்றோர் முக மலர்ச்சிக்கு உரிய கதிரவனாவர் இராமாநுஜ திவாகரர். மொழியைக் கடக்கும் பெரும் புகழ் கூரத்து ஆழ்வான் போன்ற அரிய சிஷ்யரையும் பெற்று ஸ்ரீபாஷ்யகாரரான உடையவரை உளமாரத் துதிக்கிறேன்.

வாசா யதீந்த்ர ! மநஸா வபுஷா ச யுஷ்மத்
பாதார விந்தயுகளம் பஜதாம் குருணாம்
கூராதி நாத குருகேச முகாத்யபும்ஸாம்
பாதாநு சிந்தந பரஸ்ஸததம் பவேயம் ॥ 3

யதிராசரே ! ஆசார்யனைப் பிரிந்திருப்பார் யார் ? சிந்தையாலும் சொல்லாலும், செயலாலும், ஆசார்யனான உம்மையே பற்றி நிற்கும் கூரத்தாழ்வான், திருக்குருகைப் பிரான் பிள்ளான் போன்ற உத்தமச் சான்றோர்களையே அடி பெற்றி எப்போதும் சிந்திக்குமாறு அடியேனுக்கு அருள வேண்டும்.

நித்யம் யதீந்த்ர ! தவதிவ்ய வபுஸ் ஸ்ம்ருதௌமே
ஸக்தம் மநோபவது வாக்குண கீர்த்நேஸௌ
க்ருத்யஞ்ச தாஸ்ய கரணே து கரத்வயஸ்ய
வ்ருத்யந்தரேஸ்து விமுகம் கரணத்ரயஞ்ச ॥ 4

யதித் தலைநாதனே ! உமது திருமேனி அழகிலேயே என் நெஞ்சு எப்போதும் தோய்ந்து நிற்க வேண்டும். எல்லையற்ற உமது நற்குணங்களைப் புகழ்வதிலேயே என் வாக்கு ஓங்கி ஒலிக்க வேண்டும். உமக்கு ஆற்றும் தொண்டிலேயே எனது இரு கரங்களும் செயல்பட வேண்டும். அடியேனது மெய், நா, மனம் மூன்றும் எம்பெருமானார் பணிக்கே ஆகி மற்றவற்றைத் தவிர்க்க வேண்டும்.

அஷ்டாக்ஷராக்ய மநுராஜ பதத்ரயார்த்த
நிஷ்டாம் மமாத்ர விதராத்ய யதீந்த்ரநாத !
சிஷ்டாக்ர கண்ய ஜந ஸேவ்ய பவத் பதாப்ஜே
ஹ்ருஷ்டாஸ்து நித்ய மநுபூயமமாஸ்ய புத்தி: ॥ 5

பெரிய திருமந்திரம் என்னும் நின் திருவெட்டெழுத்து, ஓம், நம: நாராயணாய என்று மூன்று பதமாய் அமைந்து சேதனரின், அநந்ய சேஷத்வம் (அவனுக்கே அடிமை) அநந்ய சரணத்வம் (அவனே ரக்ஷகன்) அநந்ய போக்யத்வம் (நாராயணனுக்கே நான்) என்னும் செம்பொருளை உணர்த்துவதோடன்றி "நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை (திருமொழி 8.10.3) என்பதற்கேற்ப பகவத் பாகவத ஆசார்யனளவில் செல்லும் உண்மை நிலையில் என்னை உறுதியுடன் நிற்கச் செய்ய வேண்டும். இங்கே இப்போதே அதனைச் செய்தருளி பெருந்தகையோரான, ஆழ்வான், ஆண்டான் போல்வார் சேவித்தொழும் உமது திருவடிகளை இடைவிடாது சிந்தையிலிருத்திச் சுவைத்து மகிழும்படி எங்கள் குலபதியே எமக்கு அருள வேண்டுகிறேன்.

அல்பாபி மே ந பவதீய பதாப்ஜ பக்தி:
சப்தாதி போக ருசிரந்வஹமேத்ததே ஹா
மத்பாபமேவ ஹி நிதாநமமுஷ்ய நாந்யத்
தத்வாரயார்ய யதிராஜ தயைகஸிந்தோ ॥ 6

கருணைக்கடல் இராமாநுச! உமது திருவடிகளில் பற்று அருகி, சப்தாதி விஷயங்களில் (கண்டு, கேட்டு, உற்று, மோந்து, உண்டு) திரியும் ஐம்புல இன்பங்களில் நாட்டம் பெருகுகிறது. இதற்கு என் முன் தீவினையே காரணம். இதனை தேவரீரே நீக்கியருள வேண்டும்.

வ்ருத்யா பசுர் நரவபுஸ் த்வஹமீத்ருசோபி
ச்ருத்யாதிஸித்த நிகிலாத்ம குணாச்ரயோயம் ।
இத்யாதரேண க்ருதிநோபி மித: ப்ரவக்தும்
அத்யாபி வஞ்சநபரோத்ர யதீந்த்ர வர்த்தே ॥ 7

மனித உடலும், மிருக நடத்தையும் உடையவன் நான்; ஆயினும் நூலறிவால் நற் குண சீலனாக நல்லோர் பரவும்படி வஞ்சகனாக உமது முன்னே, பொய்ப் புகழோடு நிற்கிறேன். இந்த வஞ்சனைப் போக்கைப் போக்கியருள வேண்டும்.

துக்காவஹோஹமநிசம் தவ துஷ்ட சேஷ்ட:
சப்தாதிபோக நிரத: சரணாகதாக்ய: ।
த்வத்பாதபக்த இவ சிஷ்டஜநௌக மத்யே
மித்யா சராமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க: ॥ 8

யதிராச! சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் எனும் சப்தாதி விஷயங்களில் நாட்டமுள்ள, நடத்தை கெட்ட நான், ப்ரபந்நன் (சரணம் பற்றியவன்) என்ற பெயரைப் புனைந்து உமது உள்ளத்தை எப்போதும் புண்படுத்தும் இயல்போடு நல்லோர் நடுவே உலவுகின்ற மூர்க்கன்.

நித்யம் த்வஹம் பரிபவாமி குருஞ்ச மந்த்ரம்
தத்தேவதாமபி ந கிஞ்சிதஹோ பிபேமி
இத்தம் சடோப்ய சடவத் பவதீய ஸங்கே
ஹ்ருஷ்டச் சராமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க: ॥ 9

யதிபதியே ! உண்மையை உணர்த்தும் ஆசார்யன், அவர் உபதேசித்த மந்த்ரம், அம்மந்த்ரத்தின் செம்பொருளான பகவான் இம்மூன்றையுமே முறைதவறி இழிவு படுத்தி வருகிறேன். இத்தகைய குற்றவாளியான நான் உமது அடியார் குழாத்தில் ஒரு பாவமும் அறியாத சாதுவைப் போல் நடையாடுகிறேன். என்னைக் காட்டில் மூர்க்கர் யாருளர் ?

ஹா ஹந்த ஹந்த ! மனஸா க்ரியயா ச வாசா
யோஹம் சராமி ஸததம் த்ரிவிதாபசாரான்
ஸோஹம் தவா ப்ரியகர: ப்ரிய க்ருத்வதேவ(ம்)
காலம் நயாமி யதிராஜ ! ததோஸ்மி மூர்க்க: ॥ 10

மனம் மெய் மொழிகளால் பகவத் பாகவத அஸஹ்ய அபசாரங்களைச் செய்து காலம் கழிக்கும் நீசனேனையும், உமது உகப்புக்கு உரியவனாய் நோக்கும் அருள்மிகு எம்பெருமானாரே எந்நிலைக்கு அந்தோ ! அந்தோ !

பாபே க்ருதேயதி பவந்தி பயாநுதாப
லஜ்ஜா: புந: கரணமஸ்ய கதம் கடேத ।
மோஹேந மேந பவதீஹ பயாதிலேச:
தஸ்மாத் புந: புநரகம் யதிராஜ குர்வே ॥ 11

அறியாமையாலோ கவனக் குறைவாலோ ஏற்படும் பாவச் செயலின் பயனாய் வரும் அச்சம், வெட்கம், கழிவிரக்கம் உண்டாயின், மீண்டும் அபசாரப்பட நேருமோ ? ஆனால் எனது நிலை வேறு, என்னைப் பாபச் செயல்கள் தொடர்கின்றனவே.

அந்தர் பஹிஸ் ஸகல வஸ்துஷு ஸந்தமீசம்
அந்த: புரஸ்திதமிவாஹமவீக்ஷமாண:
கந்தர்ப்ப வச்ய ஹ்ருதயஸ் ஸததம் பவாமி
ஹந்தத்வதக்ர கமநஸ்ய யதீந்த்ர நார்ஹ: ॥ 12

அகத்தனன், புறத்தனன், யாவையும் எவரும் தானாம் அமைவுடை நாரணன் நம் எதிரே நின்றாலும் காணமாட்டாத பிறவிக் குருடனும், மூடனுமான நான் காமம் கண் மறைக்க மாக மூடிய மனத்தனனுக் கலங்கி நிற்கிறேன். கண நேரமும் வாசுதேவ சிந்தனையற்ற எனக்கு, பழுதே பல பகலும் போயின என்று ஓலமிடுகிற எனக்கு யதிராசா ! உன் திருமுகம் நோக்கத் தகுதியில்லை.

தாபத்ரயீ ஜநித துக்க நிபாதிநோபி
தேஹஸ்திதௌ மமருசிஸ்து நதந்நிவ்ருத்தௌ ।
ஏதஸ்ய காரணம் அஹோ மமபாபமேவ
நாத! த்வ மேவ ஹரதத் யதிராஜ சீக்ரம் ॥ 13

உடலால் வரும் நோய்கள், மற்றப் பிராணிகளால் ஏற்படும் பீடை, இயற்கையால் உண்டாகும் துயரம், இவற்றுக்கிடையே இங்கேயே ஊன்றி நிற்க விழைகிறேனே இதற்குக் காரணம் நான் முன் செய்த பாவமேயாகும். ஸ்வாமியான எதிராசரே ! நீரே என்னை மீட்டருள வேண்டும்.

வாசாமகோசர மஹாகுணதேசிகாக்ர்ய
கூராதிநாத கதிதாகில நைச்ய பாத்ரம்
ஏஷோஹமேவ நபுநர்ஜகதீத்ருசஸ்தத்
ராமாநுஜார்ய ! கருணைவதுமத் கதிஸ்தே ॥ 14

தேசிகர்களுக்கெல்லாம் தலைவராய், மொழியைக் கடக்கும் பெரும் புகழ் கூரத்து ஆழ்வான், தமது துதிகளில் ஏறிட்டுக் கூறிக் கொள்ளும் புன்மைகள் அனைத்தும் உண்மையில் என் ஒருவனிடமே உள்ளன. ஸ்வாமி

எம்பெருமானார் தாம் தம் இயல்பான கருணை கூர்ந்து அவற்றை அகற்றியருள வேண்டும்.

சுத்தாத்ம யாமுநகுருத்தம கூரநாத
 பட்டாக்ய தேசிக வரோக்த ஸமஸ்த நைச்யம்
அத்யாஸ்த்யஸங்குசிதமேவ மயீஹலோகே
 தஸ்மாத் யதீந்த்ர ! கருணைவது மதகதிஸ்தே 15

'தூய்நெறிசேர் யமுனைத்துறைவர் பரமாசார்யர் ஸ்ரீ ஆளவந்தாரும், கூரத்து ஆழ்வானும் அவரது குமாரர் பட்டரும் தமது நூல்களில் தமக்கு ஏறிட்டுச் சொன்ன எல்லா இழி குணங்களும் என் ஒருவனிடத்தே முழுமையாக வுள்ளது. இத்தகைய எனக்கு உமது இயல்பான கருணையைத் தவிர உய்வுக்கு வழியில்லை.

சப்தாதி போக விஷயா ருசிரஸ்மதியா
 நஷ்டாபவத்விஹ பவத்தயயா யதீந்த்ர !
த்வத்தாஸ தாஸ கணநா சரமாவதௌய:
 தத்தாஸதைக ரஸதா அவிரதா மமாஸ்து 16

இந்த உடலோடிருக்கையில் பகவதனுபவ விரோதியான, புலனின்பச் சுவையில் உள்ள நாட்டம் உமது அருளால் தொலைய வேண்டும். தேவரீரின் அடியார் தம் அடியவர்க்கு எல்லை நிலத்துள்ள பெருந்தகையோருக்கு வழுவிலா அடிமை செய்யும் பேறு அடியேனுக்கு வாய்க்க அருள் புரிய வேண்டும்

ச்ருத்யக்ரவேத்ய நிஜதிவ்ய குணஸ்வரூப:
 ப்ரத்யக்ஷதாமுபகதஸ்த்விஹ ரங்கராஜ:
வச்யஸ்ஸதா பவதிதே யதிராஜ தஸ்மாத்
 சக்தஸ்ஸ்வகீயஜந பாப விமோசனே த்வம் ॥ 17

ஒருவரால் இயற்றப்படாததாய், மனிதக் குற்றம் குறைகளற்றதாய், ஊழி பலவாகத் தொடர்வதான வேதத்தால் மட்டுமே அறியத்தக்க குணக்கடலானவனும், ஊனக்கண்ணால் காணவொண்ணாத தனது திவ்யத் திருமேனியை மண்ணிலுள்ளார் கண்ணுக்கு இலக்காக்கி, திருவரங்கம் பெரிய கோயிலிலே கண் வளருமவனுன நம்பெருமாள், உம்மையே உபய விபூதிக்கும் (மண்ணுக்கும் விண்ணுக்கும்) உடையவராக்கி நீர் இட்ட வழக்காய்த் தானும் இருப்பதால் அடியார் அல்லல் தீர்க்க அருள்மிக்க உமக்கேதும் தடையுளதோ ?

காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி
 பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவ
ஸாசத்வயைவ கமலாரமணேர்த்திதாயத்
 க்ஷேமஸ் ஸ ஏவஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம் 18

எதிர், நிகழ், கழிகாலமெல்லாம், மனம், மெய் மொழிகளால் ஓயாது செய்து வரும் பகவத் பாகவத, ஆசார்யர்களுக்கு ஒவ்வாத செயல்களைப் பொறுத்தருள வேண்டுமென்று அழகிய மணவாளனிடம் ஸ்ரீரங்கநாய்ச்சியாரை முன்னிட்டுச் சரண் புகுந்து (தம் அடியார்களுக்காக) இராமானுசர் ப்ரார்த்தித்த படியை சிந்திக்கும், அடியார்களுக்கு அந்த சித்திப்பே சிறந்த காப்பாகும்.

ஸ்ரீமந் யதீந்த்ர தவதிவ்ய பதாப்ஜஸேவாம்
 ஸ்ரீ சைலநாத கருணாபரிணாம தத்தாம்
தாமந்வஹம் மம விவர்த்தய நாத ! தஸ்யா:
 காமம் விருத்த மகிலஞ்ச நிவர்த்தய த்வம்

மற்றெல்லாம் துறந்து, மாதவன் பணியையே சேம வைப்பாகக் கொண்ட எம்பெருமானார் திருவடிகளே

நமக்குத் தஞ்சம் என்று அடியேனுக்குக் காட்டியருளிய ஆசார்யர், திருமலையாழ்வார், ஸ்ரீ சைலேசர் திருவாய் மொழிப்பிள்ளை, திருவடியைப் பற்றி நின்று எம்பெருமானார் தர்சன கைங்கர்யத்தை இனிது செய்ய உள்ள தடைகளை யதிராசரே போக்கியருள வேண்டும். பகவத் காமத்தையும் தவிர்த்து ஆசார்யன் பணியே வாழ்வாக அமைய வேண்டும் என்கிறார்.

விஜ்ஞாபனம் யதிதமத்யது மாமகீநம்
அங்கீகுருஷ்வ யதிராஜ தயாம்புராசே
அஜ்ஞோயமாத்ம குணலேச விவர்ஜிதச்ச
தஸ்மாதநந்ய சரணோ பவதீதி மத்வா ॥ 20

கருணைக்கடலே எம்பெருமானாரே ! இதயம் கனிந்து ஆர்வம் மிகுந்து வெளிவரும் இந்த விண்ணப்பத்தை ஏற்று வேறு கதியற்ற எளியன், ஆத்ம குணம் சிறிதும் இல்லாத அடியேனுக்கு உம்மைத்தவிர இரங்குவார் வேறு யார் ? குற்றங் காணாமல் அடியவன், கதியற்றவன் என்று கருணை கூர்ந்து, அடியேனின் துதி வடிவிலான இந்த விண்ணப்பத்துக்குச் செவிசாய்த்து அருள வேண்டும் என ப்ரார்த்தித்து நூலைத் தலைக் கட்டுகிறார் மணவாள மாமுனிவன், பெரிய ஜீயர் என்னும் வரவரமுனி.

அபகதமத மானை: அந்திமோபாயநிஷ்டை:
அதிகத பரமார்த்தை: அர்த்த காமாநபேக்ஷை:
நிகில ஜனஸுஹ்ருத்பி: நிர்ஜித க்ரோதலோபை:
வரவரமுநி ப்ருத்யை: அஸ்துமே நித்யயோக:

(உத்தரதின சர்யை - 13)

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம் !